# அடிமையும் சிங்கமும்

தமிழ் ஆக்கம்
அனுமிதா



அண்ட்ரோக்ளஸ் என்ற அடிமைக்கு பயந்த சுபாவம். ஆனால், சுதந்திரமடைய வேண்டும் என்கிற ஆசை அதிகமாகவே இருந்தது. தனது கொடூரமான எஜமானனிடமிருந்து தப்பிக்க, பழக்கப்படாத ஒரு காட்டிற்கு ஓடினான்.

அந்த காட்டில் அண்ட்ரோகளஸ் காயமடைந்த ஒரு சிங்கத்தைப் பார்த்ததும் பயந்துவிட்டான். ஆனால் காட்டு மிருகங்களின் மீதிருந்த பரிதாபம் அவனது பயத்தை போக்கடிக்க, அவன் சிங்கத்திற்கு உதவினான். நகைச்சுவையும், கருணையும் நிரம்பிய அண்ட்ரோக்ளஸும், சிங்கமும் என்கிற இந்த கதை, கோழைகளை ஊக்கப்படுத்தி, தைரியசாலிகளை மகிழ்ச்சியூட்டும் ஒன்று.
பால் கால்டோனின் ஒரு புதிய தழுவலான இந்த கட்டுக்கதையை, பண்டைய ரோமானிய கால அமைப்பில் தற்போதைய தலைமுறை வாசகர்களுக்காகத் தெளிவாக நாடகமாகக் தரப்பட்டிருக்கிறது



வெகு காலத்திரற்கு முன்பு, ரோம் நகரத்தில், அண்ட்ரோக்ளஸ் என்றழைக்கப்பட்டவன் கொடூரமான ஒருவனுக்குக் கீழ் அடிமையாக இருந்தான்.

“எனக்கு இங்கிருந்து சுதந்திரம் வேண்டும்” என்றே தனக்குள் எப்போதும் சொல்லிக் கொண்டிருந்தான்.

ஒரு நாள், யாவரும் தூங்கிக் கொண்டிருக்கும் போது, இரகசியமாக அங்கிருந்து தப்பி, ஒரு அடர்ந்த காட்டுக்குள் ஓடி போய்விட்டான்.

காட்டுக்குள் சுற்றி-சுற்றி
அலைந்ததில் பசியும்,
களைப்பும் அவனை
பலஹீனமாக்கியது

அங்கு ஒரு சிங்கம் புலம்புவதும், சோகமாக உறும்புவதும் கேட்டது.





. அண்ட்ரோக்ளஸ் மிகவும் பயந்து, ஓடுவதற்குத் தயாரானான். ஆனால், அந்த சிங்கம் அவனைத் துரத்தாமல், இன்னும் பலஹீனமாகவே உறும்பிக் கொண்டேயிருந்தது. அதனால் அண்ட்ரோக்ளஸ், ஓசைபடாமல், மெதுவாக அந்த சிங்கத்தை நோக்கி நகர்ந்தான் அப்படியும், அது அசையாமல் இருந்தது. அப்போது சிங்கத்தின் வலது முன்கை வீங்கி, இரத்தப்போக்கு இருந்ததை அவன் பார்த்தான். ஒரு பெரிய முள், உள்ளே போனதால் அந்த சிங்கத்திற்கு இத்தனை வலி.



அண்ட்ரோக்ளஸ் தனது விரல்களால் முள்ளைப் பிடித்த போது,
சிங்கம் வலியால் கர்ஜிக்கவும் , அவன் பயத்தில் நடுங்கிவிட்டான்.
இருந்தும், அந்த முள்ளை அவன்  பலமாக இழுத்ததும், அது
வெளியில் வந்துவிட்டது.



விரைவில் சிங்கத்தால் எழுந்து நிற்க முடிந்தது. அண்ட்ரோக்ளஸ் ஓட நினைத்தான்; ஆனால் சிங்கம், ஒரு நாய் போல வாலை ஆட்டிக் கொண்டு, அவனிடம் நெருங்கி வந்து அவன் கைகளை நக்க ஆரம்பித்தது. பிறகு இடித்து முட்டியது. நான் அத்துடன் கூட போவதற்கு விரும்புகிறது போலும் என்று அவன் எண்ணினான்

விரைவாக அவர்கள்
சிங்கத்தின் குகைக்குள்
வந்துவிட்டார்கள்



அண்ட்ரோக்ளஸ், படுத்துக் கொண்டு ஓய்வு எடுத்துக் கொண்டான். ஒழிந்துக் கொள்வதற்கு ஒரு இடமும், அத்துடன் ஒரு சிநேகிதமும் கிடைத்ததில் மகிழ்ச்சி அடைந்தான். சிங்கம் தினமும் அவனுக்கு மாமிசதுண்டுகளை உணவிற்குக் கொண்டு கொடுத்தது. இருவரும் ஒன்றாக மகிழ்ச்சியுடன்

இருந்தபோது.....





சிங்கம் ஒரு நாள் வேட்டையாட போன சமயத்தில், ஓடி போன அடிமைகளைத் தேடி , பேரரசரின் படையினர் காட்டு வழியாக சென்றார்கள். அப்போது அண்ட்ரோக்ளஸ் குகையில் தூங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்துவிட்டு, அப்படியே அவனைக் கட்டி எடுத்து சென்றுவிட்டார்கள்

அந்த காலத்தில், தங்களுடை எஜமானர்களிடமிருந்து ஓடி போன அடிமைகளுக்குத் தண்டனையாக அவர்கள் பசியால் வாடும் சிங்கத்துடன் ஒரு அரங்கில் போராட வேண்டும். பேரரசருக்கும், மற்ற மக்களுக்கும் அது ஒரு போழுது போக்காக இருந்தது. அதனால், சிப்பாய்கள் அண்ட்ரோக்ளஸை, இருட்டடைந்த ஒரு சிறைஅறையில் வைத்து, பெரிய நிகழ்ச்சிக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். அத்துடன், பயங்கர பசியுடன் சீற்றமடைந்த ஒரு சிங்கத்தையும் பிடித்து வந்து, அரங்கதின் அருகில் இருந்த கூண்டு ஒன்றிற்குள் அடைத்து வைத்துவிட்டு, அதை அந்த நாள் வரும்வரைப் பட்டினி போட்டார்கள். தன்னுடைய இருண்ட அறையிலிருந்த அண்ட்ரோக்ளஸ் பசிவெறி அதிகரித்துக் கொண்டேயிருந்த சிங்கத்தின் பயங்கர கர்ஜனையைக் கேட்க முடிந்தது.





கடைசியில் எதிர்பார்த்திருந்த அந்த நாளும்   வந்தது. இருட்டிலிருந்து வெளியில் தள்ளப்பட்டவுடன், சூரிய வெளிச்சம் கண்ணைக் கூச அண்ட்ரோக்ளஸ் கண்ணைப்பாதி மூடி கொண்டே, நடு அரங்கத்திற்கு வந்தான். கூட்டத்தின் உற்சாகமும் சத்தமும் இன்னும் அச்சமூட்ட அவன் நடுக்கமும் அதிகரித்தது.



சிம்மாசனத்தில் சக்கரவர்த்தி சிரித்துக் கொண்டே தனது பிரபுக்களுடன் பேசிக் கொண்டிருந்தார். திடீரென்று, அவர் தன் கையை உயர்த்தி சுட்டிக்காட்ட. கூட்டம் அமைதியாகிவிட்டது. அங்கு முழு அமைதி நிலவியது



கூண்டு திறக்கபட்டதுமே சிங்கம்
அரங்கிற்குள் கர்ஜித்துக் கொண்டே
பசி வெறியுடன் பாய்ந்து வந்தது.

ஓடுவதற்கோ, மறைந்துக் கொள்வதற்கோ ஒரு இடமும் இல்லை. சிங்கம் தன்னை சுற்றி ஒரு பார்வையிட்டுவிட்டு. ஒரு பயங்கர உறுமலுடன் அவனை நோக்கி பாய்ந்தது. "இத்துடன் நான் தொலைந்தேன்" என்று கண்ணை மூடி நினைத்த அண்ட்ரோக்ளஸ் விம்மிக்கொண்டே சிங்கத்தை எதிர்க்க திரும்பி தன் தலைவிதியை எதிர்பார்த்துக் காத்திருந்தான்



திடீரென உறுமல் நின்றது. அவனுடைய உடலின் எந்த பாகத்தையும, கூர்நகங்கள் சிதைக்கவில்லை; பற்கள் அவன் தோலைக் கடித்துக் கிழிக்கவில்லை. ஆனால் ஈரமான, சொரசொரப்பான நாக்கு ஒன்று அவனை, தலையிலிருந்து கால் வரை, சிநேகபாவத்துடன் நக்கிற்று.
அந்த சிங்கம்
குகையில் இருந்த அவனுடைய தோழன்.





ஹூரே! மகிழ்ச்சியுடன் கூட்டம் கத்தியது.
“என்ன அதிசயம்! அடிமையை விடுதலை
செய்யவும்! சிங்கத்தை விடுவிக்கவும்! "

சக்கரவர்த்தி தன் முன்னால், அண்ட்ரோக்ளஸை வரவழித்து, சிங்கம் இப்படி நடந்துக் கொண்டதன் காரணம் என்ன என்று கேட்டதும், ஆ, அதுவா! பிரபுவே!........ என்று அண்ட்ரோக்ளஸ் தொடங்கினான்.

காட்டில் நடந்த கதையைக் கேட்டதும், அரசர், இதுவரை அடிமையாக இருந்த அண்ட்ரோக்ளஸ் மற்றும் அவனுடைய நண்பனான சிங்கத்தையும் விடுவிக்க முடிவு செய்தார்.





இருவரும் காட்டை நோக்கி
ஒன்றாகச் சென்றார்கள்.

முற்றும்.